சிவசிவ உ சிவமயம் சிவசிவ

03–04–2003 வியாழக்கிழமை நடைபெறுகின்ற
P.R. சரவணன் – T.S. விஜயராணி
திருமணத்தின்போது அளிக்கப்பெற்ற

# வாஸ்து சாஸ்திரம்

*(ஜோதிடரீதியான வாஸ்து சாஸ்திர விளக்கம்)*

| தென்மேற்கு *ராகு* | மேற்கு *சனி* | வடமேற்கு *சந்திரன்* |
|---|---|---|
|  |  |  |
|  | பிரம்ம ஸ்தானம்  *கேது* |  |
|  |  |  |
| *சுக்கிரன்* தென்கிழக்கு | *சூரியன்* கிழக்கு | *குரு* வடகிழக்கு |

கன்னி
தெற்கு *செவ்வாய்*
அக்னி

வாயு
வடக்கு *புதன்*
ஈசானம்



### குரு வணக்கம்

குரு ப்ரம்மா குரு விஷ்ணு
குருதேவோ மஹேஸ்வர:
குரு சாக்ஷாத் பரப்ரம்மா
தஸ்மை ஸ்ரீ குரவே நமஹ

### ஸ்ரீ விநாயகர் துதி

ஐந்து கரத்தனை ஆனைமுகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகந்தனை ஞானக்கொழுந்தனை
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே...!

### ஸ்ரீ அபிராமி அந்தாதி

தனந்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லனஎல்லாம்தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே...!

### ஸ்ரீ வாஸ்து காயத்ரி

ஓம் அநுக்ரஹரூபாய வித்மஹே
பூமிபுத்ராய தீமஹி
தந்நோ வாஸ்துபுருஷ : ப்ரசோதயாத்

### கிரகப் பிரவேசப் பத்திரிகையில் இப்பாடலை சேர்ப்பது சிறப்பு

இல்லத்திற் சென்று புக்கார் இருநிதிக் குவைகள் ஆர்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி
வில்லொத்த நுதலாய்! இந்த விளைவெலாம் என்கொல் என்ன
அல்லொத்த கண்டன் எம்மான் அருள்தர வந்த தென்றார்

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்டினல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே



# சமர்ப்பணம்



ஆன்மா கடைந்தேற அடியேனுக்கு சிவதீட்சை அருளிய பள்ளத்தூர், நந்தி ஆசிரமம், குரு இறையருட்செம்மல், ஆதிசைவ அருட்தோன்றல், ***சிவஸ்ரீ பாலசுப்பிரமணியம் சிவாச்சாரியார்*** அவர்களின் அருளாசியுடனும், வாஸ்து ஆலோசகர், வாமதேவசிவம் ***சிவத்திரு ஹரிவாசுதேவ் அய்யா*** (சிவதீட்சகர்) அவர்களின் நல்லாசியுடனும், அருள்வாக்குச்செம்மல் திரு. ***A.P. சந்திரன் அய்யா*** அவர்களின் பூரண ஆசிகளுடனும், ஜோதிடகுரு பேராசிரியர் உயர்திரு. ***M.V. சுப்புராமன்*** அவர்களின் ஆசீர்வாதத்துடனும், எம்மை இந்நூல் உருவாக காரணமாக இருந்து ஊக்குவித்தவர்கள் உயர்திரு. ***V.V. ரெங்காச்சாரி,*** (S.E./E.B), புலவர் ***சிவத்திரு. கணேசன் அய்யா*** அவர்களின் ஆசிகளுடனும் அடியேன் இந்நூலை சிறுமுயற்சியாக உருவாக்கி, மேற்கூறிய பெரியோர்களின் பொற்றாமரைப் பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.

இந்நூல் வெளியிட எல்லாவிதத்திலும் ஆதரவாக இருந்த நண்பர் திரு. ***C.S. சரவணன்பாபு*** அவர்களுக்கு எம் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் தங்களுக்கு வாஸ்து சம்பந்தப்பட்ட அனைத்து சந்தேகங்களை போக்கி, பயன் தரும் என அடியேன் கருதுகிறேன்.

இந்நூலில் அடியேன் ஏதேனும் தவறுகள் செய்திருப்பின் மனமுவந்து, எம்மை தொடர்புகொண்டு, அத்தவறுகளை சுட்டிக்காட்டி என்னை மேலும் பக்குவப்படுத்த வேண்டி மனம், வாக்கு, காயங்களால் பணிந்து கேட்டுக்கொள்கிறேன்.

நன்றி

தங்கள்

***சிவசிவ P.R. சரவணன்***

(கட்டட பொறியாளர், வாஸ்து ஆலோசகர்)

அலுவலக விலாசம்:

**சார்ப் கன்ஸ்ட்ரக்ஷன்**

287, மேலமாசி வீதி, 2–வது மாடி, மதுரை – 1

போன்: 2340076 (கடை), 2333780 (வீடு)

செல்போன்கள் 98421–51313, 3100694

உ
சிவமயம்

உலகில் தோன்றி வளர்ந்துள்ள உயிரினங்களில் அறிவிலும், திறனிலும் உயர்ந்து நிற்பவன் மனிதன். உண்ண உணவும், உடுத்த உடையும், வசிக்க உறைவிடமும் வாழ்க்கையில் இன்றியமையாதது எல்லா உயிரினங்களுக்கும் அவசியம். ஒரு குருவி கூட கூட்டைக் கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகிறது.

உடலை மறைக்க ஓரளவுக்கு ஆடை என்று இருந்தால் போதுமானது. உண்பதற்கு முறையாக உணவு கிடைத்தால் போதும். உறைவிடம் என்று சொல்லப்படும் வீடு என்பது மனித ஜீவராசிகளுக்கு நன்றாக அமைய வேண்டும். மேற்சொன்ன இரண்டு அத்தியாவசியத் தேவைகளை கூட கொஞ்சம் கூட்டவோ, சுருக்கவோ செய்யலாம். ஆனால் மனையடி சாஸ்திரம் என்று சொல்லப்படும் வாஸ்து சாஸ்திரப்படி வீடு என்பது கட்டப்பெறவேண்டும். அவ்வாறு வீட்டை சரியாக அமைத்துக்கொண்டால் உணவும், உடையும் நமக்கு நன்றாக அமையும்.

வாஸ்து சாஸ்திரப்படி வரைபடம் அமைத்து, வாஸ்து பூஜையை வாஸ்து நாளன்று ஆரம்பிக்கின்றனர். வாஸ்து என்பதற்கு நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் எனப்படும் பஞ்சபூதங்களைக் குறிக்கிறது. இவற்றில் ஏதேனும் ஒன்று கூடினாலும், குறைந்தாலும் நம்மால் ஒன்றும் செய்ய இயலாது. பஞ்ச பூதங்கள் உறையும் ஜடப்பொருட்களான வஸ்துக்களை வாஸ்துவாக மாற்றிக் கொள்கிறோம்.

உதாரணமாக, மரம் என்பது வஸ்து எனப்படுகிறது. அந்த மரத்தை வெட்டி கட்டில், மேஜையாக மாற்றிக்கொள்வது வாஸ்து ஆகும். மண், செங்கல், சிமெண்ட் போன்றவை வஸ்துக்கள். அவற்றை கட்டடமாக மாற்றுவது வாஸ்து.

வாஸ்து என்பது நமது உடல் அமைப்பைக் குறிக்கிறது. ஜாதகம் என்பது நம் உடலில் உறையும் உயிரைக் குறிக்கிறது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்ப்பதே மிகச்சிறந்தது.

ஒருவருக்குத் திருமணம் செய்யவேண்டுமானால் அவரின் ஜாதகப்படி அவருக்கு வியாழ நோக்கம் வந்து விட்டதா? என்றும், களத்திரகாரகன் சுக்கிரன் எப்படி, எந்த வீட்டில் யாருடன் சேர்ந்து இருக்கிறார்? போன்ற கேள்விகளைக் கேட்கின்றனர். ஜோதிடரிடம் அதைப்பற்றி ஆலோசிக்கின்றனர்.

அதேபோன்று ஒருவர் வீடு கட்டவேண்டும் என்று நினைத்து ஒரு நல்ல கட்டட வடிவமைப்பாளர் அல்லது நல்ல மேஸ்திரி ஒருவரை வைத்து வீட்டைக் கட்ட ஆரம்பிக்கின்றார். வாஸ்து சாஸ்திரப்படி அந்த வீடு நன்றாக அமைவதும், அமையாமல் போவதும் அவரின் ஜாதகத்தைப் பொறுத்துத்தான் அமையும். ஜாதகத்தில் உள்ள கிரகங்களின் ஆதிக்கத்தைப்பொறுத்துத்தான் வீடு அமையும். ஆதலால் ஜாதகத்தையும் ஆலோசிப்பது மிகவும் நல்ல பலன்களைக் கொடுக்கும்.

## வாஸ்து சாஸ்திரத்தின் பலன்கள்

★ ஈசான மூலையில் (குரு) – பூஜை அறை, போர்டிகோ, காலி இடம், குழந்தைகள் படிக்கும் அறை, வரவேற்பறை போன்றவற்றை அமைத்தால் அவ்வீட்டில் தெய்வ கடாட்சம் உண்டாகும். பெண்களுக்கு மிகவும் நல்லது. மற்றும் பள்ளிக்கூட வளாகம் ஏற்புடையது. இங்கு போர், ஆழ்குழாய் கிணறு அமைக்கலாம்.

★ கிழக்கு திசை (சூரியன்) – நகை வியாபாரிகளுக்கு ஏற்றது. மற்றும் பூஜை அறை, சாப்பாட்டு அறை, பயிலவும், படிக்கவும் சிறந்த இடம். மாணவ, மாணவியர் கல்வியில் நல்ல தேர்ச்சி பெறுவர். அரசாங்கத்தில் சிறந்த உத்தியோகம் கிடைக்கும். ஆசிரியர்களுக்கு உகந்த திசை. (இந்திரன்–சுக்கிரனுக்கு உரிய திசை)

★ தென்கிழக்கு திசை (சுக்கிரன்) – என்பது சமையல் அறை, சாப்பாட்டு அறையை தவிர வேறு எதுவும் இருக்கக்கூடாது. இந்தத் திசையில் படுக்கை அறையை அமைத்துக்கொண்டால் மனமானது கெட்டுப்போகும். பெண்களுக்கு ஆகாது. உஷ்ணம் சம்பந்தப்பட்ட நோய் உண்டாகும். வியாபாரிகளுக்கு நல்லது. பனி உறை கட்டிகள் தயாரிக்கும் தொழிலுக்கு ஏற்றது. வெள்ளி வியாபாரம் செய்பவர்களுக்கு நல்லது.

★ தெற்கு திசையில் (செவ்வாய்) – கழிப்பறை, படுக்கும் அறை, காட்சி அறை அமைவது நல்லது. இந்தத்திசை எமதர்மனுக்குரிய திசை. இந்தத்திசையில் படுக்கை அறையை அமைத்துக்கொண்டால் ஆழ்ந்த உறக்கம் வரும். மாறாக அமைந்தால் கடுங்கோபம் உண்டாகும். தென்திசை செவ்வாய், முருகனுக்குரிய வழிபாடுகளுக்கு நல்லது. மற்றும் தீயணைப்புப்படை, காவல்துறையினருக்கு நல்லது.

★ தென்மேற்குத்திசையில் (ராகு) – படுக்கை அறை, பொருள் பாதுகாப்பு அறை, பணப்பெட்டக அறை, நல்ல பொருட்களை வைக்கும் அறை ஆகியவைகளுக்கு சிறந்தது. இம்மூலையில் ராகு என்ற கிரகத்தின் ஆதிக்கம் இருப்பதால் ஆழ்குழாய் கிணறுகள் அமைத்தல் கூடாது. மேலும் ராகு விந்து செயல்காரகன் ஆவார். இந்த மூலையில் சமையல் அறை, ஆழ்குழாய் போர், கழிப்பறை, பாத்ரூம் அமைத்தால் விந்துவானது செயலிழக்கமாகி உடல் அசௌகரியத்தையும், உறக்கமின்மையையும், கொடுக்கும். உடல் மெலிந்து காணப்படும். ஈசானத்தில் ஆழ்குழாய் அமைத்து, கன்னியில் படுக்கையறை அமைத்தால் பொருட்செல்வமும், குழந்தைச்செல்வமும் பெருகும். சந்ததி வளர்ச்சி நிச்சயம் உண்டு. ஆகவே இம்மூலை மிகவும் முக்கியமானது. இம்மூலை சரியாக தொண்ணூறு டிகிரியில் அமைக்கவேண்டும். நாற்பத்து ஐந்து டிகிரியில் குத்து விழக்கூடாது.

★ மேற்கு திசையில் (சனிபகவான்) – இரும்பு மற்றும் ஆயுள்காரகன் ஆவார். இந்தத்திசையில் படுக்கை அறை, பூஜை அறை, கழிவறை மற்றும் வியாபாரிகளுக்கு ஒத்துப்போகும். இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரம் செய்பவர்களுக்கு நல்லது. மில் தொழில், தொழிற்சாலைகளை அமைத்தல் நலம் பயக்கும்.

★ வடமேற்கு திசை வாயு மூலை (சந்திரன்) – சமையல் அறை, கழிவறை, குளிக்கும் அறை, விருந்தினர் அறை அமைத்தல் நலம் உண்டாக்கும். மாறாக வேறு ஏதாவது அமைத்தால் கோர்ட் வழக்கு போன்ற பிரச்சனைகள் எழும். ஆன்மீகம், தெய்வங்கள் சம்பந்தப்பட்ட பொருட்கள் வியாபாரம் செய்வதற்கு ஏற்றது. கன்னிப்பெண்கள் இந்த அறையில் தூங்கினால் விரைவில் திருமணமாகி புகுந்த வீட்டுக்கு செல்வர். பிரசவம் போன்ற நேரத்தில் இந்த அறையில் படுத்தால் விரைவில் சுகப்பிரசவம் ஏற்படும்.

★ வடக்கு திசை குபேரனுக்குரியது (புதன்) – பணம், விலையுயர்ந்த பொருட்கள், படிப்பறை, குழந்தைகள் படிக்கும் அறை ஆகியவைகளுக்கு உகந்த இடம். குழாய் கிணறுகள் அமைக்கலாம். இத்திசை யாவருக்கும் நற்பலன்களை வழங்கும்.

★ வீட்டின் நடுபாகம் (பிரம்ம ஸ்தானம்) கேது பகவானுக்குரியது. இவர் காற்றுகாரகன். அதனால் முன்னோர்கள் வீட்டின் நடுவில் முற்றம் அமைத்து வீடு கட்டினார்கள். அதனால் வீட்டின் நடுபாகத்தில் படுக்கக்கூடாது.

★ வீட்டில் உள்ள மழைநீரை ஈசானம், கிழக்கு, வடக்கு திசைகளில் மழைநீர் சேகரிப்புத் தொட்டி அமைத்து, மழைநீரை சேகரித்தால் அந்த வீடு செல்வச்செழிப்புப் பெறும்.

★ மழைநீரை சேகரிக்கும்போது குளியலறை நீர் மற்றும் அடுப்படி கழிவு நீரை சேகரிக்கக்கூடாது. அப்படி செய்தால் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படும்.

★ துளசிமாடம் வடகிழக்கு, தென்கிழக்கு மூலைகளில் அமைக்காது, மற்ற மூலைகளில் அமைக்கலாம்.

★ வடகிழக்கு மூலையாகிய ஈசானத்தில் பெரிய மரங்களை வளர்க்கக் கூடாது. ஏனெனில் நமக்கு நலம் தரும் கதிர் அதிர்வு அலைகளை பெறமுடியாமல் போய்விடும்.

★ நாம் நிலம் வாங்கும்போது முன்புறம் பெரியதாகவும், பின்புறம் சிறியதாகவும் அமையாமல் வாங்கவேண்டும். மேற்சொன்னபடி நிலம் அமைந்து விட்டால் நாம் வாஸ்து சாஸ்திரப்படி வீட்டை அமைத்து, நற்பலன்களைப் பெறலாம்.

★ பழைய, புதிய வீட்டில் தென்மேற்கு மூலையில் போர் போட்டிருந்தால் அதற்கு பரிகாரமாக ஈசான மூலையில் (வடகிழக்கு) மூன்று அடி நீள, அகல, ஆழம் கொண்ட கீழ்நிலைத்தொட்டி அமைத்து நீரை நிரப்பிவைத்தால் போதும். ஈசானத்தில் போர் போட்ட பலன்கள் நமக்குக் கிடைக்கும்.

★ பழைய அல்லது புதிய வீட்டின் அடி அளவுகள் நாள்காட்டி அல்லது பஞ்சாங்கத்தில் உள்ள அளவுகளுக்கு மாறுதலாக இருக்கும்பட்சத்தில் (உ–ம். 13 அடி, 14 அடி) அதை உடைத்து மாற்றம் செய்வதோ அல்லது புதிய சுவர் ஒட்டி எழுப்புவதோ கூடாது. அதனால் தோஷநிவர்த்தி ஆகாது. கட்டடம் வடக்கு அல்லது கிழக்கிலோ சுவர் எழுப்புவது வாஸ்து தோஷத்தைக் கூட்டுமேயொழிய குறைக்காது.

★ பணம் கொடுக்கும் கம்பெனி, நகை வியாபாரம் செய்வோர் பெரிய அளவில் வியாபாரம் செய்து லாபத்தை ஈட்டும்போது, வேறு இடத்திற்கு கடையை மாற்ற வேண்டிய சூழ்நிலையில், ஒட்டுத்தாவாரம் அல்லது கான்கிரீட் தாவாரம் மேற்கு அல்லது தெற்கு பக்கம் இருக்கும் கடைகளில் மாற்றியமைத்தால் அந்த வியாபாரம் நிச்சயமாக நலிவடையும். வளர்ச்சி குன்றி பொருளாதாரச் சிக்கல் ஏற்படும்.

★ வீட்டின் பீரோ, பூஜை அறை கிழக்கு அல்லது வடக்கு நோக்கி இருக்கவேண்டும். நாம் அமரும்போதுகூட மேற்சொன்ன திசையைப் பார்த்து அமரவேண்டும்.

★ உரல், அம்மி, கிரைண்டர் மற்றும் பெரிய சாமான்கள் தென்மேற்கு மூலையில் வைக்கவும். தண்ணீர்த்தொட்டி தென்மேற்கு மூலையில் மேல்மாடியில் இருப்பது நல்லது.

★ அடுப்பு தென்கிழக்கு மூலையில் இருக்கவேண்டும். அடுப்படி ரூமில் இரண்டரை அடி உயரம் கான்கிரீட் மேடை அமைத்து அதில் வடகிழக்கு மூலையில் சிங்க் தொட்டி அமைப்பது நல்லது. அக்னி மூலை சுக்கிரனுக்கு உரியது. அங்கு கருப்புவண்ணம் கொண்ட அடுப்படி மேடையை அமைக்காது மற்ற நிறங்களில் அமைக்கலாம். (மார்பிள், டைல்ஸ், சஹாபாத் போன்ற கற்கள் அமைக்கலாம்)

★ வீட்டில் வர்ணங்கள் அடிக்கும்போது எரிச்சல் ஏற்படாதவண்ணம் வெளிர் நிறங்களில் இருப்பது நலம். கருப்பு, சிவப்பு போன்ற எரிச்சலூட்டும் வகையில் இருப்பது நல்லதல்ல.

★ ஈசானத்தில் குழந்தைத்தொட்டி அமைந்தால் குழந்தைகள் நல்ல உறக்கம் கொள்ளும். விழித்தெழும்போது அழாமல் விழிப்பார்கள்.

★ வாஸ்து முறைப்படி வீட்டை அமைத்து, கதவு எண் 8, 17, 35, 44, 7, 13

என்று அமைந்துவிட்டால், அதனால் கெடுபலன்கள் விளையும் என்று எடுத்துக்கொள்ளவேண்டாம். எண்கணித அடிப்படையில் வீட்டின் உட்புறத்தில் பார்வை படும் வகையில் ஒன்று அல்லது ஆறு என்ற எண்ணை எழுதி ஒட்டி விட்டால் நற்பலன்கள் கிடைக்கும். இதுதவிர குடும்பத்தலைவரின் ஜாதகத்தில் சனி, கேது ஆட்சி, உச்சம் பெற்றிருந்தால் நன்மைகள் விளையும். தீமைகள் ஏற்படாது.

★ அஷ்டமி, நவமி, சதுர்த்தி, அமாவாசை போன்ற நாட்களில் வாஸ்து நாள் அமைந்துவிட்டால் தாராளமாக வாஸ்து பூஜையை செய்யலாம். காரணம் வாஸ்து பகவான் வருடத்தில் எட்டு நாட்கள் மட்டும் விழித்தெழுந்து மனையை கட்டுவோர்க்கு அருள்பாலிக்கிறார் என்பதால் அஷ்டமி, நவமி போன்ற திதிகளை பொருட்டாக எடுத்துக்கொள்ளவேண்டாம்.

★ புதிதாக கட்டும் வீடுகளுக்கு மட்டுமே வாஸ்து பார்க்கவேண்டும் என்று நினைக்கவேண்டாம். ஏற்கனவே கட்டிய பழைய வீடுகளில் வாடகைக்கோ அல்லது ஒத்திக்கோ குடியிருப்போருக்கும் வாஸ்து சாஸ்திரம் பொருந்தும்.

★ கடன் வாங்கி வாஸ்து சாஸ்திரப்படி வீட்டை அமைத்துக்கொண்டால் லாட்டரியில் ஒரு கோடி ரூபாய் விழும் என்ற மூட நம்பிக்கை கூடாது. இருக்கிற வீட்டை மாற்றியமைக்கவும் வேண்டாம்.

★ வீட்டுக்கு எதிரில் அல்லது பக்கத்தில் சிவன் கோயில், பெருமாள் கோயில் இருந்தால் அதனால் தீயபலன்கள் விளையும் என்று கருதவேண்டாம். அருகில் இருந்தால் எக்காலத்துக்கும் நன்மையே விளையும்.

## *ஜாதகத்தில் வீடு அமையும் யோகம் அறியும் முறை*

★ லக்னத்தின் 4-ம் இடத்தில் சுபகிரகங்கள் அமைதல்

★ சுக்கிரன், செவ்வாய் நல்ல இடத்தில் அமைதல் வேண்டும்

★ குரு பார்வை

★ 4-க்குடையவன் இருக்கும் இடம்

★ லக்னத்திற்கு 12-ம் இடத்தில் சுபகிரகங்கள் அல்லது இதில் ஏதாவது ஒன்று நன்றாக அமைந்தாலும் கண்டிப்பாக வீடு கட்டும் யோகம் உண்டு.

## *வாஸ்து சாஸ்திரப்படி கிரகங்களின் ஆட்சி முறை*

| | |
|---|---|
| குரு | பூஜை அறை, பொன் |
| சூரியன் | வலது ஜன்னல், மூங்கில், அஸ்திவாரம் |
| சந்திரன் | இடது ஜன்னல், நீர், கொட்டம் |
| செவ்வாய் | நிலம், உத்தரம், செங்கல், மண் |
| புதன் | படிப்பறை, படுக்கையறை |

| | |
|---|---|
| ராகு | மொட்டை மாடி, வீட்டின் பழைய சாமான்கள் |
| கேது | சமையல் அறை, விருந்தினர் அறை |
| சுக்கிரன் | சமையல் அறை |
| சனி | இரும்பு சம்பந்தப்பட்டவை |

- வீட்டின் வடகிழக்கு மூலையில் கழிப்பறை தென்மேற்கு மூலையில் குழாய் கிணறு மற்றும் அடுப்பறை இருந்தால் வாஸ்துபடி அந்த வீட்டின் அமைப்பு சரியில்லை என்று அர்த்தம். அப்படி உள்ள வீட்டில் எப்படி வசிக்கமுடியும் என்ற கேள்வி எழலாம். ஆனால் அந்த வீட்டுக்காரரின் ஜாதகத்தைப் பார்த்தோமானால், அவருடைய ஜன்ம லக்னம் தனுசாக இருந்து, குரு கடகத்தில் உச்சம் பெற்றும், ராகுவானவர் விருச்சிகத்தில் உச்சம் பெற்று, 4–ம் வீடான மீனத்தில் சுக்கின் உச்சம் பெற்றிருப்பார். ஜாதகப்படி அவர் பல வீடுகளுக்கு சொந்தக்காரராகி, பெரிய அரண்மனை போன்ற வீட்டில் வசிப்பார். அந்த ஜாதகர் தனது ஆயுள்காலம் வரை நன்றாகவே வாழ்வார். தவறு நேரிடாது.
- ஜாகத்தில் சனி நீசம் பெற்றிருந்தாலும், 6–8–12 ல் மறைந்திருந்தாலும், வீடு கட்டும்போது கம்பி ஆர்சிசி போஸ்ட்டு சரியாக அமையாமல் போகலாம். ஆனாலும் அந்த ஜாதகர் கட்டடம் கட்டி முடிக்கப்பெறுவார்.
- லக்னத்திற்கு 4–ஆம் வீட்டில் இராகு, கேது, சனி இவைகள் இருந்தால் கட்டடம் கட்டுவதற்கு தாமதம் ஏற்படும். கட்டடம் கட்டும்போது பல இன்னல்களை சந்திக்க நேரிடும். ஆகவே வாடகை வீட்டில் வசிப்பது நலம் பயக்கும்.
- ஒரு என்ஜினியர் அல்லது மேஸ்திரியைக் கொண்டு வீடு கட்டும்போது பேஸ்மட்டம் போட்டு முடித்த பிறகு ஜாதகர் வேறு ஒரு என்ஜினியர் அல்லது மேஸ்திரியைக் கொண்டு வீட்டை கட்டினார் என்றால் 4–ம் இடத்தில் இராகு, கேது இருப்பார்கள். அந்த வீட்டை குரு பார்த்தார் என்றால் வீட்டை உடனடியாக கட்டி முடிப்பார். இல்லையெனில் சில ஆண்டுகள் கழித்து முடிப்பார்.
- வீடு வாஸ்துபடி கட்டப்பட்டு, அக்னி மூலையில் அடுப்படியும் அமைந்து விட்டது. ஆனால் அடுப்படி மேடை சற்று உயரமாக அமைந்து சமையலின்போது இடையூறுகள் ஏற்படுமானால், ஜாதகப்படி சுக்கிரன் நன்றாகத்தான் இருப்பார். ஆனால் அவரை சனிபகவானோ, கேதுவோ 7–ம் பார்வையாக சுக்கிரனைப் பார்க்கிறார் என்று அர்த்தம். அதேபோல் வீட்டின் முகப்பும் சரியாக அமையாமல் போவதற்கும் மேற்சொன்னவை காரணமாக அமைகிறது.
- வீட்டின் ஈசான மூலையில் போர் போட்டும் தண்ணீர் வரவில்லை என்றால் ஜாதகருக்கு சந்திரன் நீசம் அல்லது மறைந்து இருப்பார். நீர் கிடைக்காது.

அப்பேர்ப்பட்ட ஒருவருக்கு 402 அடியில் நீர் கிடைக்கிறது என்றால் குரு அவரைப் பாா்ப்பாா்.

- மொட்டை மாடியில் துணிமணிகள் அல்லது உண்ணும் பதார்த்தங்களை காயப் போட்டிருந்து அவை காணாமல் போகின்றதென்றால் ராகு ஜாதகத்தில் சரியான இடத்தில் இல்லை என்று அர்த்தம்.
- பூஜை அறை தனியாக இருக்கவேண்டும் என்றால் குரு நன்றாக இருந்தால் மட்டும் அமைத்துக் கொள்ளலாம். இல்லையெனில் சுவற்றில் பூஜை அலமாரியை வைத்துக்கொள்ளலாம்.
- கிழக்குப் பார்த்த வீட்டிற்கு ஈசானத்திலிருந்து அக்னி வரை உள்ள பகுதியை ஒன்பதாகப் பிரித்து, (சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என) அதில் நடு மூன்று பகுதிகளான புதன், குரு, சுக்கிரன் பாகங்களை தலைவாசலாக அமைக்கின்றோம். இது பொதுவான வாஸ்து சாஸ்திர விதியாகும். வீட்டுக்காரரின் ஜாதகத்தில் குருவோ, சுக்கிரனோ, புதனோ, நீசம் அல்லது மறைவு பெற்றிருந்தால் நடுபகுதியில் தலைவாசல் வைப்பது தவறாகும். அந்த வீட்டுக்காரரின் ஜாதகத்தில் சூரியனோ, சந்திரனோ, செவ்வாயோ அல்லது மூன்று கிரகங்களும் ஆட்சியோ, உச்சமோ பெற்றிருந்தால் அந்த கிரகங்களுக்குரிய பாகத்தில் தலைவாசல் வைப்பது சரியாகும். அதனால் நற்பலன்களை அந்த வீட்டுக்காரர் பெறுவார் என்பது உறுதி.
- நிலத்தை வாங்கி வீடு கட்டாமல், கட்டிய வீடு, அடுக்குமாடி வீடு வாங்கி செல்வதற்கு காரணம் நிலத்திற்கு அதிபதியாகிய செவ்வாய் நீசம், மறைவாகி, சுக்கிரன் லக்கினத்திற்கு 4–ல் இருப்பதால்தான்.
- வீடு கட்டி முடித்து கிரகப்பிரவேசம் செய்து எட்டு மாதத்தில் அந்த வீட்டில் யாராவது பூரணம் அடைந்து விட்டால் அந்த வீடு ராசியில்லாத வீடு என்று கருதவேண்டாம். அதற்குக் காரணம் கண் திருஷ்டி, வயது, வாஸ்து சாஸ்திரதோஷம், அக்னி காரியம், ஹோமம், துன்பத்திற்கு காரணமாகிய அதிர்வலைகள்.

### *வியாபாரத்துக்குரிய திசைகள்*

கிழக்கு – சுக்கிரன் – பெயிண்ட் வியாபாரம், பேன்ஸி லைட் பிட்டிங், பலசரக்குக்கடை

வடகிழக்கு – குரு – தங்கநகைக்கடை, பெண்கள் உபயோகிக்கும் நவநாகரீகக்கடை

தென்கிழக்கு – சுக்கிரன் – பிஸ்லரி வாட்டர், அடுப்பு, டிரான்ஸ்பார்மரும், அதன் சம்பந்தப்பட்டவைகளும்

தெற்கு – செவ்வாய் – மின் உபகரணங்களின் கடை, செங்கல், ஜல்லி வியாபாரம், மில் அலுவலர்கள்

மேற்கு – சனி – இரும்புக்கடை, தொழிற்சாலை, அடுப்பு

தென்மேற்கு – ராகு – ஹோட்டல், டீ கடை, போஜனம் சம்பந்தப்பட்டவை, விற்பனைக்கு உள்ள பொருட்கள்

வடமேற்கு – சந்திரன் – சிமிண்ட் கடை, புரோக்கர் ஆபீஸ், மணல் வியாபாரம் வடக்கு – புதன் – குழாய், பைப் ஃபிட்டிங்ஸ் போன்றவை அமைத்தல்

- வீட்டிற்கு புதுமனை புகுவிழா என்று பத்திரிகைகளில் பிரசுரம் செய்வது நல்லதல்ல. மனையில் வேறு ஏதேனும் புகுந்து விடும். கிரகப் பிரவேசம் என்று பிரசுரம் செய்தல், கிரகங்களை அழைத்துச் சென்று நம் மனையில் அந்தந்த இடங்களில் அந்த கிரகங்களை அமர வைத்தல் என்று பொருள்படும்.
- கோயில் கட்டுவதற்கு சாஸ்திரம் ஏதும் பார்க்கவேண்டுமா? என்றால் கோயில் வாஸ்து வேறு, சிற்ப சாஸ்திரம் வேறு. ஒரு கோயிலுக்கு விமானமே முக்கியம். அதுவும் சுவாமிக்கு கீழ் வைக்கப்படும் எந்திரம் தான் அதிமுக்கியம்.
- ஒருவருக்கு வடகிழக்கு நீண்டும், சந்து வீடு – முட்டுச்சந்து அமைவதற்குக் காரணம் குரு ஜாதகத்தில் நன்றாக அமைந்திருக்க வேண்டும். சரியான ஈசானத்தில் நிலை அமையும். இது உறுதி.
- தமிழ்நாட்டில் தற்சமயம் மழைநீர் சேகரிப்பு தொட்டி அமைத்தல் என்பது கண்டிப்பாக உள்ளது. அவ்வாறு தொட்டி அமைக்கவேண்டுமென்றால் வடகிழக்கு, வடக்கு, கிழக்கு, சந்திரன் நன்றாக இருப்பின் அதுவும் வேலை செய்யும்.
- கிரகப்பிரவேசம் செய்யாமல் குடி போவதின் காரணம், ஜாதகத்தில் அனைத்து கிரகங்களும் ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் இருப்பதுதான். (வீடு கட்டும் யோகம் – சுக்கிரன் நன்றாக இருந்தால் வீடு கட்ட ஆரம்பித்து இரண்டு மாதத்தில் பேஸ்மட்டம் முடிந்து விடும். இப்போது பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. வீடு கட்டமுடியுமா என்று பார்க்கவேண்டும் என்று யாராவது கேட்டால் சுக்கிரன், குரு, செவ்வாய் நன்றாக இருந்தால் அந்த திசை வரும் காலங்களில் கண்டிப்பாக வீட்டை கட்டி முடிக்க முடியும்.
- வீடு கட்டி மூன்று அல்லது நான்கு வருடங்களில் கட்டடத்தின் பல பகுதிகளில் வெடிப்பு கொடுக்குமானால், கேது சரியில்லாமல் போனால் இப்படி ஆகும். (வாயு மூலை எனப்படுவது காற்று காரகம் – இது கெட்டுப் போனால் வெடிப்பு ஏற்படுவது சகஜம்)

- ஒரு ஜாதகருக்கு ராகு சரியாக அமையவில்லையென்றால் அந்த வீட்டில் களவு போக வாய்ப்புக்கள் உள்ளன.

- ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் தியேட்டர் கண்டிப்பாக கன்னி மூலையில் தான் இருக்கவேண்டும். நோயாளியை தெற்குத்திசையில் தலையை வைத்து படுக்க வைத்து, மருத்துவர் கிழக்கு முகமாக நின்று அறுவை சிகிச்சை செய்ய நல்லபடியாக, சீக்கிரமாகவும் அந்த அறுவை சிகிச்சை முடியும்.

- வடக்கு பார்த்த வீட்டிற்கு ஈசானம்–தலைவாசல், அக்னி–அடுப்பு, கன்னி–கக்கூஸ்/பாத்ரூம், வாயு–பெட்ரூம் இந்த அமைப்புள்ள வீட்டில் வாயுமூலையில் இளம் தம்பதியினர் தூங்கினால் கெட்ட சொப்பனமும், மனதில் பயமும், வீண் சண்டையும் வரும். குழந்தைபேறு கிடைக்கக் காலதாமதம் ஏற்படலாம். இங்கு திருமணம் ஆகாதவர்கள் அந்த மூலையில் தூங்கினால் மட்டும் திருமணம் சீக்கிரம் நடக்கும்.

- அக்னி மூலையில் மாஸ்டர் பெட்ரூம் அமைந்தால், கன்னி மூலையில் அடுப்படி இருந்தால் வீட்டின் குழந்தைகள் காதல் திருமணம் செய்து கொள்ள வாய்ப்புக்கள் நிறைய உள்ளன. (ஜாதகத்தில் சுக்கிரன் உச்சம் பெற்று குரு அவரைப் பார்த்திருந்தால் மேற்சொன்னது நடைபெறாது).

- வீட்டில் உள்ளோர் பெரும்பாலும் மூக்குக்கண்ணாடி அணிவதன் காரணம் கிழக்குப்பக்கம் நிலை, ஜன்னல் எதுவும் வைக்காமலும், காலி இடம் விடாமலும் இருப்பதால் சூரியன் ஒளி வீட்டுக்குள் விழாமல் போய்விடுகின்றது. அதனால் கண்பார்வை மங்கும். கண்ணாடி அணியும் நிலை ஏற்படும்.

- வடகிழக்கு மூலையில் அடுப்படி அமைத்து இருந்தால் வீட்டின் குழந்தைகளோ அல்லது பெரியவர்களோ லேசாக திக்கித்திக்கி பேசக்கூடிய வாய்ப்புண்டு. காது சற்று கேளாமல் இருக்கலாம்.

- தென்மேற்கு மூலையில் அடுப்படி இருந்தால் காலிலோ, கையிலோ எலும்பு முறிவு ஏற்பட்டு பிளேட் வைக்கக்கூடிய சந்தர்ப்பம் உண்டு. இருந்தாலும் ராகுவை குரு பார்த்திருப்பாரானால் மேற்சொன்னது சிராய்ப்புடன் போய்விடும். கண்டிப்பாக அடுப்படி அக்னிமூலையில் இருப்பது மிகவும் நல்லது. உடனே மாற்றவும்.

- ஜென்ம லக்னம் மகரமாகி, பத்தாமிடம் துலாமில் சனி உச்சம் பெற, மேஷத்தில் செவ்வாய் ஆட்சி கொள்ள, ஏழாமிடம் கடகத்தில் குரு உச்சம் பெற்றாரானால் அரண்மனை போன்ற மாடமாளிகை ஜாதகருக்கு அமையும். பணியாட்கள் நிறைய பேரை வைத்து வேலை வாங்கும் யோகம் உண்டாகும். அந்த ஜாதகர் பெரும்பாலும் இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரத்தைச் செய்வார்.

- வீட்டில் விக்ரங்களை வைத்து வழிபாடு செய்பவர்கள், அந்த விக்ரகங்கள் கட்டை விரலை விட உயரமாக இல்லாமல் பார்த்துக்கொள்வது நல்லது. அப்படி உயரமாக இருந்தால் தினமும் ஆச்சாரத்துடன் பூஜை செய்து ஆண்டவனுக்கு நைவேத்தியம் படைக்கவேண்டும்.

- வீட்டின் தலைவாசலிலோ, அல்லது உள்ளே நுழைபவர்களின் பார்வை படும் இடங்களிலோ அகோர தெய்வப்படங்களை வைக்கவேண்டாம். வேறு இடத்திற்கு மாற்றம் செய்யவும். ஏனெனில் வீட்டிற்கு வருபவர்களும், வீட்டில் உள்ளவர்களும் கோபம் கொள்ளக்கூடும்.

- தலைவாசலில் சங்கு பதிக்க நினைப்பவர்கள் அதை முறையாக பதிக்கவும். காரணம், திருப்பதி வெங்கடாஜலபதியின் கையில் உள்ளது சங்கு. அதை நாம் கால்மிதி படும்படி வைக்கிறோம். கவனம் தேவை. மேலும் பூமியில் படக்கூடாதவைகள் இவை...

  1. சங்கின் நுனி, 2. மணியின் நாக்கு, 3. பெண்ணினன் மார்பகம். அதனால்தான் பெண்கள் பூமியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கக்கூடாது என்று நம் முன்னோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

- கட்டடத்தின் எல்லா சுவர்களுக்கும் வர்ணம் பூசுகிறோம். ஆனால் சீலிங் எனப்படும் மேற்பரப்புக்கு மட்டும் வெள்ளை அடிப்பதன் காரணம், நாம் தூங்கி எழும்போதும், சூரிய வழிபாடு செய்யும்போதும் நாம் புத்துணர்ச்சி பெற இந்த வெள்ளை நிறம் உதவுகிறது. மேலும் வெள்ளைநிறம் மனசாந்தியைக் கொடுக்கும். சூரியனுக்கு உரிய நிறமாகும்.

- ஒரு கோடீஸ்வரர் பல வீடுகளை வைத்திருக்கிறார். ஆனால் தான் வசிக்கும் வீட்டை மட்டும் வாஸ்து சாஸ்திரப்படி அமைத்துக்கொண்டு, மற்ற வீடுகளை வாஸ்துப்படி கட்டாமல், வாடகையை மட்டும் மனதில்கொண்டு கட்டி இருப்பாரானால் அதற்குரிய தூர்பலன்கள், அங்கு குடியிருப்பவர்களுக்கு எழுபத்துஐந்து சதவீதமும், அந்த வீட்டுக்காரருக்கு இருபத்து ஐந்து சதவீதமும் சென்றடையும். இதில் சந்தேகமே இல்லை.

- வீட்டிற்கு எதிரில் பால் உள்ள மரங்களோ, முட்செடிகளோ இருந்தால் அகற்றி விடவும்.

- தலைவாசலில் எலுமிச்சம்பழத்தை திருஷ்டி பரிகாரத்துக்காக கட்டி வைப்பதன் நோக்கம், எலுமிச்சையானது குளிர்ச்சியானது, மற்றவர்களின் துர்பார்வையை அகற்றும், அவர்களின் மனதை மாற்றக்கூடியது. (அதனால்தான் கல்லடி பட்டாலும் கண்ணடி படக்கூடாது என்பார்கள்).

- வாஸ்து பூஜை நேரம் சரியாக முப்பது நிமிடங்கள்தான். அதற்குள் வாஸ்து பகவான் கண் விழித்தெழுந்து தூங்கி விடுவார்.

0–5 நிமிடம் பல் துலக்கும் நேரம்
5–10 நிமிடம் குளிக்கும் நேரம்
10–15 நிமிடம் பூஜை நேரம்
15–20 நிமிடம் சாப்பாடு நேரம்
20–25 நிமிடம் தாம்பூலம் தரிக்கும் நேரம்
25–30 நிமிடம் நித்திரைக்குச் செல்லும் நேரம்

இதில் வாஸ்துபகவான் பூஜை செய்யும் நேரத்திலோ அல்லது தாம்பூலம் தரிக்கும் நேரத்திலோ வாஸ்து பூஜை செய்யவேண்டும். வாஸ்து குச்சியை (வேம்பு, பாலை, வில்வம்) எடுத்து வைக்கும் நேரமும் அது.

வாஸ்துபுருஷன் என்பவர் பூமித்தாயின் புதல்வன். நாம் கட்டடம் கட்ட ஆரம்பிக்கும்போது வாஸ்து பூஜை செய்யவேண்டியது அவசியம். அதை வாஸ்து நேரம் எனப்படும் அந்த அரைமணி நேரத்திற்குள் செய்யவேண்டும். அதற்காக வாஸ்துபகவான் தாம்பூலம் தரிக்கும் அந்த ஐந்து நிமிட நேரத்திற்குள் செய்து விடவேண்டும், இல்லையென்றால் அதனால் நன்மை கிடைக்காது என நினைக்க வேண்டாம். தெய்வங்கள் நம்மை எப்போது தீங்கு செய்யாது. வாஸ்து பூஜை அவசியம். அதற்காக எந்தவித கட்டுப்பாட்டையும் கையாளவேண்டிய அவசியமோ, அதனால் வீண் வருத்தமோ வேண்டாமே...!

மேலும் தேங்காயை உடைக்கும்போது சிலருக்கு சரியாக உடைக்க வரும். சிலருக்கு தேங்காயை உடைக்கும்போது எதேச்சையாக கை நழுவி விடும். அதற்காக வருத்தப்படுபவர்கள் நிறையபேர் உண்டு.

ஏனெனில் பெரும்பாலும் கொத்தனாரோ, ஆசாரியோ வாஸ்து பூஜை செய்வார்கள். அவர்கள் கலையில் வல்லுநர்கள். தேங்காய் உடைக்கும் பழக்கம் அவர்களுக்கு அவ்வளவாக இருக்காது. அதை நாம் பெரிதாக நினைக்கவேண்டிய அவசியமில்லை. மேலும் வாஸ்து பூஜையின்போது நிறை விளக்காக வைக்கவும். தீபமேற்ற வேண்டாம். காற்றுக்கு தீபம் அணையக்கூடும். அதை அபசகுனமாக கருதவேண்டி வரும். மலர்களை நீர் நிரம்பிய வாஸ்துக் குழியில் போட்டு சுற்றி விட்டு அது எந்த மூலையில் நிற்கிறது என்று மனசஞ்சலத்தை ஏற்படுத்திக்கொள்ளவேண்டாம். அனைத்து மூலைகளும் முக்கியமானது.

- கட்டடம் கட்ட ஆரம்பிப்பதற்கு முன் முதலில் மணலை போடவேண்டும் என்பது சாஸ்திரம். காரணம் மணல் என்பது செவ்வாய் – பூமிகாரகன்.
- கிழக்குப்பக்கம் காலியிடம், நிலை, ஜன்னல் எதுவும் வைக்காமல் வீடு கட்டினால் பெண் குழந்தைகள் மட்டுமே பிறப்பார்கள். ஆண் சந்ததி குறைவாக இருக்கும்.

- கட்டடத்தில் மேற்கூரை போட்டு முடிந்தவுடன் வீட்டின் வடகிழக்கு மூலை அல்லது பிரம்ம ஸ்தானத்தில் விளக்கு அல்லது பல்பு போட்டு விளக்கை எரிய விடவும்.

- வீட்டின் ஜன்னல் கிரில் அல்லது கேட்டுகளில் சாமிபடங்களை (விநாயகர், லட்சுமி) மாட்டுவதை தவிர்க்கவும். காரணம்... உட்புறமிருந்துகொண்டு எச்சில் துப்பவோ, குப்பை கொட்டவோ, தகாத வார்த்தைகளை உச்சரிக்கவோ செய்வோம். சாமிப்படங்கள் கலைப்பொருட்களல்ல. தீயபலன்கள் வராமல் பார்த்துக்கொள்ளவும். விநாயகர் இருக்கிறார் என்றால் விநாயக சதுர்த்தியன்று மட்டும் பால், பழம், நைவேத்தியங்கள் வைத்து வழிபாடு செய்து விட்டு அடுத்த நாளே விநாயகரை கண்டு கொள்வதே கிடையாது.

- ஜென்ம லக்னத்திற்கு 4–ஆம் வீட்டில் இராகு, கேது இருப்பாரானால் குலதெய்வ வழிபாடு அந்த ஜாதகருக்குக் கட்டாயம் இருக்கவேண்டும். குலதெய்வ வழிபாடு செய்யவும். அதனால் நன்மைகள் கிட்டும்.

- புது வீடு கட்டும்போது பழைய நிலை, ஜன்னல்களை வைக்கக்கூடாது என்று சிலர் சொல்லுகிறார்கள். பலருக்கு இதை வைக்கலாமா என்ற குழப்பம் இருக்கலாம். பழைய நிலை, ஜன்னல்களை தாராளமாக வைக்கலாம். எந்தவித தோஷமும் கிடையாது. ஆனால் நிலை, ஜன்னல் சுருங்கவோ, விரியவோ கூடாது. அவ்வளவுதான். பழைய நிலை, ஜன்னல் வைப்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று பொருளாதாரம். மற்றொன்று ஜாதகத்தில் ராகு–கேது–செவ்வாய் மூவர் சேர்க்கை இருக்கும் அல்லது பார்வை இருக்கும்.

- வீட்டிலோ, அலுவலகத்திலோ கணிப்பொறியை வைத்துள்ளவர்கள் கிழக்கு அல்லது வடக்குப் பார்த்து அமர்ந்து வேலை பார்க்கவும். (தென்கிழக்கு மூலை, வடமேற்கு மூலையை தவிர்க்கவும்).

- வீட்டின் முன் முகப்பு சரியாக அமையவில்லையென்றால் சுக்கிரன் ஜாதகத்தில் பகை வீட்டிலோ, மறைந்தோ இருக்கலாம்.

- பெண்கள் சமையல் செய்யும்போது தீ அல்லது பாத்திரம் சுட்டு விடுகின்றன என்றால் ஜாதகத்தில் சுக்கிரன் கெட்டுப் போய் இருக்கலாம். அல்லது அக்னி மூலையில் சமையலறை இல்லாமல் இருக்கலாம். அல்லது அக்னி மூலையில் வேறு ஏதாவது பிரச்சனைகள் இருக்கலாம்.

- வடகிழக்கு மூலை நீண்டு இருந்தாலோ, கன்னி மூலை சரியான முறையில் அமைந்திருந்தாலோ, ஜாதகத்தில் ராகு 12–ஆம் வீட்டில் இருந்தாலோ அந்த ஜாதகர் வெளியூருக்கோ, வெளிநாடுகளுக்கோ சென்று சம்பாதித்து வருவார். நிறைய பொருட்களை சேர்ப்பார்.

- வீட்டிலுள்ள பல்புகள் அடிக்கடி அடியாகிறது, அடிக்கடி ஷாக் அடிக்கிறதென்றால் ஜாதகத்தில் செவ்வாய் பகை வீட்டிலோ அல்லது மறைந்தோ இருக்கலாம். மேலும் தெற்கு பார்த்த வீட்டிற்கு தென்மேற்கு பள்ளமோ, போர்டிகோவோ இருக்கக்கூடாது. அப்படி இருந்தால் மேற்சொன்ன துர்பலன்கள் நடக்கும்.

- வீடு மனையடி சாஸ்திரப்படி இல்லாமல் இருக்கும் நிலையில், வீட்டின் நடுவிலோ, தென்மேற்கு மூலையிலோ பிரமிட் வைத்தால் அனைத்து தோஷங்களும் நீங்கும் என நம்பி பொருள் விரயம் செய்ய வேண்டாம். பிரமிடுகளால் எவ்வளவு நன்மைகள் ஏற்படுமோ அவ்வளவு நன்மைகள்தான் நடக்கும். அதற்காக மொத்த வீட்டையும் மாற்றி பலன் தரும் என்று சொல்லிவிட முடியாது.

- ஜன்ம லக்னத்திற்கு 4–ஆம் வீட்டில் சனியிருந்தால் சொந்த வீடு கட்டும்போது மிகவும் ஜாக்கிரதையாகவும், வாஸ்து சாஸ்திரம் நன்கு தெரிந்தவர்களிடம் ஆலோசித்தும் அவ்வீட்டை அமைக்கவும். இல்லையென்றால் அவ்வீட்டில் துர்தேவதைகள் குடிகொள்ளும். செய்வினை போன்ற துர்மாந்திரீகம் ஏற்பட வாய்ப்புகள் உண்டு. ஜாதகத்தில் சனி உச்சம், ஆட்சி பெற்றிருந்தால் மேற்சொன்னவை மாறி நற்பலன்கள் விளையும். குரு பார்வை இருந்தாலும் நற்பலன்கள் உண்டு.

- ஜன்ம லக்னத்திற்கு 4–ஆம் வீட்டில் குரு இருந்தால் மாடமாளிகை கட்டி கனரக வாகன வசதிகளோடு வாழ்வார்கள். மேலும் சுக்கிரன் ஆட்சி பெற்றிருந்தால் யானை கட்டி வாழ்வதற்கு அதிர்ஷ்டம் உண்டு.

- ஒருவரின் வீடு வாஸ்து தோஷங்களுடன் உள்ளது. அவ்வீட்டை சீர் செய்ய பொருளாதார வசதி இல்லை. அவரின் பெயரை மாற்றி எண்கணித முறைப்படி மாற்றி அமைத்துக்கொண்டால் அவரின் பொருளாதார சிக்கல் தீர்ந்துவிடுமா என்று கேட்டால் நிச்சயமாக தீராது. வீட்டை வாஸ்துபடி மாற்றியமைத்தால் மட்டுமே தீரும்.

- வீட்டின் ஹாலில் மற்றும் பெட்ரூமில் சீனரி (கடல், நீர்வீழ்ச்சி, ஆறுகள், நதிகள்) படங்களை வைத்திருந்தோமானால் சந்திரனின் ஆதிக்கம் கூடும். அதனால் மன அமைதியும், மன தைரியமும் உண்டாகும்.

- வீட்டின் பூஜை அறையில் அல்லது சாமி படங்களுடன் மறைந்த நம் பெரியோர்களின் படங்களை சேர்த்து வைக்கலாமா என்று சிலர் கேட்கின்றனர். கட்டாயமாக வைக்கக்கூடாது. பெரியவர்களின் படங்களை தெற்கு அல்லது மேற்கு பார்த்து வேறு இடங்களில் வைக்கவும்.

- வீட்டின் நடுவில் முற்றம் அமைத்தோ, நவ நாகரீகமாக தோட்டம் போன்ற அமைப்பு ஏற்படுத்தி வைத்தால் அந்த வீட்டில் செல்வம் கொழிக்கும்.

தெய்வத்தின் அருள்கடாட்சம் நிறைய கிடைக்கும். தெய்வம் வாசம் செய்யும்.

- கன்னி மூலை அல்லது வாயு மூலை கெட்டுப்போனால் குடும்பத்தலைவரோ, குழந்தைகளோ புகைப்பழக்கம் மற்றும் போதைப்பழக்கத்திற்கு ஆளாவார்கள்.

- வீட்டின் கதவுகள் தானாக மூடிக்கொள்ளும்படி அமைக்கக்கூடாது. அது மன நிம்மதியை குறைக்கும்.

- நிலத்தில் அல்லது வீட்டில் வடகிழக்கு, தென்மேற்கு மூலை வெட்டுப்படாமல் (கட் ஆகாமல்) வாங்கவும். கட்டடம் எழுப்பவும். வெட்டுப்பட்டிருந்தால் வம்ச விருத்தி ஏற்படாது.

- வடகிழக்கு, கிழக்கு, வடக்கு பார்த்த வீட்டிற்கு எதிர்புறம் சந்து இருந்தால் (குத்து விழுந்தால்) கெடுபலன்கள் நடக்காது. நற்பலன்களே விளையும். பயப்பட வேண்டியதில்லை.

- நான்கு ரோடு சந்திக்கும் இடம், முச்சந்தி போன்ற இடங்களில் அடிக்கடி விபத்துக்கள் ஏற்படுவதற்குக் காரணம் அங்கு காற்றுசுழி உண்டாகிறது. அங்கு தூர்தேவதைகள் வாசம் செய்கிறது. அதனால் மெதுவாகப் பார்த்து செல்லவும்.

- வாஸ்து பூஜை செய்தவுடன் மறு வாஸ்து நாள் வருவதற்குள் வீடு கட்ட ஆரம்பிக்கவேண்டும். கட்டடம் தெற்கு, மேற்கு பார்த்து இருந்தால் கன்னி மூலையில் செட் போடவும். வீடு வடக்கு, கிழக்கு பார்த்து இருந்தால் வாயு மூலையில் செட் போடவும். கட்டடம் சீக்கிரமாக கட்டி முடிக்கலாம்.

- கட்டடம் கட்ட நிலத்தை தோண்டும்போது எலும்பு, இரும்பு, பழைய கட்டை போன்றவை வந்தால் அதை அவ்விடத்தை விட்டு நீக்கி விட்டு சாந்தி பரிகாரமாக சிறு பூஜை செய்து, பின் கட்டட வேலையை ஆரம்பிக்கவும்.

- காவல் நிலைய்த்தில் திருடர்களை அடைத்து வைப்பதற்கு கன்னி மூலையில் சிறை அறையை அமைக்கவேண்டாம். இவ்வாறு செய்தால் திருடர்கள் மென்மேலும் குற்றங்கள் புரிந்து அந்த காவல் நிலையத்திற்கு வந்தவண்ணம் இருப்பார்கள்.

- சாலையை விட வீடு பள்ளத்தில் அமையக்கூடாது. அவ்வாறு இருந்தால் வீட்டை சாலைக்கு மட்டப்படுத்தவும். இல்லையெனில் தீயப்பலன்கள் விளைய சந்தர்ப்பங்கள் உண்டு.

- பள்ளி, கல்லூரிகளில் கிழக்கு பார்த்து மாணவர்கள் அமர்ந்து கல்வி கற்பது நல்லது. கன்னி மூலை நன்றாக இருக்கவேண்டும். இல்லையென்றால் மாணவர்கள் கெட்டுப்போவார்கள்.

- பழைய அல்லது புது வீட்டின் சுவர்களில் வெடிப்பு இருந்தாலோ, பேஸ் மட்டம் இறங்கியும் இருந்தாலோ உடனே சரி செய்யவும்.
- வீட்டுக்கு தலைவாசல் நடுவில் வைக்காமல் கொஞ்சம் தள்ளி வைக்கவேண்டும். இல்லையென்றால் வீட்டிலுள்ள பெண்களுக்கு உடல் அசௌகரியங்கள் உண்டாகும். விருந்தினர்களும் அடிக்கடி வந்து போவார்கள்.
- வங்கி, கல்லூரி, ஹோட்டல், லைப்ரரி போன்றவைகளுக்கு தலைவாசல் நடுவில் வைத்தால் நல்லது. மக்கள் வந்த வண்ணம் இருப்பார்கள்.
- வீட்டில் சேந்தி, பரண்கள் வடக்கு, கிழக்கு சுவர்களை ஒட்டி அமைக்கக் கூடாது. ஈசானத்தில் மாடிப்படி அமைப்பதை தவிர்க்கவும்.
- ஒரு பெரிய வீடோ, கடையோ இருந்து நான்கு பக்கமும் ரோடுகள் அமைந்திருந்தால் அந்த கடையோ, வீடோ மிகவும் பிரபல்யமாகும்.
- கிழக்குப்பக்கம் பெரிய கட்டடம் இருந்து நம் வீட்டிற்கு சூரிய வெளிச்சம் கிடைக்காமல் போனால் உடல் உபாதைகள் ஏற்படும்.
- வீட்டிற்கு நடுவிலோ அல்லது வடகிழக்குப் பகுதியிலோ தோட்டம் அல்லது நீர்வீழ்ச்சி அமைத்துக்கொண்டால் மிகவும் நல்லது.
- ஈசான மூலையில் செருப்பு, துடைப்பம், பழைய துணிமணிகள், அம்மி, உரல், பழைய பேப்பர் போன்றவை இருந்தால் அகற்றி விடவும்.
- ஜாகத்தில் சுக்கிரன் நீசமடைந்தோ, மறைந்தோ இருந்து, குரு பார்த்திருந்தால் வீடு கட்டும்போது முன்பக்கம் ஒடு தாவாரம் போன்ற அமைப்புடன் கட்டவும்.
- வீட்டில் உள்ளவர்களின் முகம் பெரிதாகவோ, சிறிதாகவோ அல்லது வித்தியாசமாகவோ இருந்தால் ஈசானம், கன்னி மூலைகள் கெட்டு போய் இருக்கும்.
- காவல் துறையை சார்ந்தவர்களுக்கு செவ்வாய் நல்ல வீட்டிலோ, ஆட்சியாகவோ, உச்சமாகவோ இருப்பார். அவர்கள் தெற்கு பார்த்த இல்லத்தில் வசித்து வந்தால் சொந்த வீடு கட்டி குடி போவார்கள்.
- திருமண மண்டபம், வங்கி போன்றவைகளை கட்டும்போது கன்னி மூலையில் தலை வாசல் வைக்கக்கூடாது. அப்படி இருப்பின் மாற்று வாசல் அமைத்து அதை உபயோகப்படுத்தவும்.

***வான்முகில் வழாது பெய்க மணிவளம் சுரக்க மன்னன் கோன்முறை அரசு செய்து குறைவிலாது உயிர்கள் வாழ்க நான்மறை அறங்கள் ஓங்குக நற்றவம் வேள்வி மல்க மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்***

திருச்சிற்றம்பலம்

## *வாஸ்து பூஜை செய்யும் முறை*

கட்டடம் கட்டப்போகும் இடத்தை சுத்தம் செய்து, ஈசானம் சற்று தாழ்வாக இருக்கும்படி செய்து கொள்ளவும். கட்டடத்தின் ஈசான மூலையில் ஓரடி விட்டம் (ரவுண்டு) கொண்ட ஓரடி பள்ளம் செய்யவும்.

கிழக்குத்திசையைப் பார்த்து சுவாமிப்படங்களை வைத்து ஈசானத்தில் நிறைகுடநீரை வைத்து, அக்னிமூலையில் நிறைவிளக்கை வைத்து வாழையிலையை கிழக்குப்பக்கம் வடக்கு தெற்காக வைத்து, அதில் தேங்காய் பழம், பூஜைக்குரிய பொருட்களை வைத்து, நாம் வடக்குப் பார்த்து நின்று பூஜையை ஆரம்பிக்கவேண்டும்.

பத்து இன்ச் உள்ள வாஸ்து குச்சியில் (வேம்பு, வில்வம், பாலை இதில் ஏதேனும் ஒன்று) சந்தனத்தைத் தடவி, மஞ்சள் துணியில் நவதான்ய கட்டி வாஸ்துகுச்சியில் நுனியில் முடிந்து வைக்கவும். அக்குச்சியை வாழையிலையில் வைக்கவும். அக்குச்சிக்கு மல்லிகைப்பூ அல்லது நிறைமாலையை சாற்றவும்.

வாஸ்து நேரத்தில் விநாயகரை வணங்கி அவருக்கு பூஜை செய்யவும். பிறகு வாஸ்து குச்சியை எடுத்து வீட்டுக்காரரும், அவரது குடும்பத்தார் ஐந்து அல்லது ஏழு பேராக சேர்த்து அக்குச்சியை பூமியில் நட்டு வைக்கவும். மேலும் அதற்கு பால், பசுமாட்டு கோமியம், மஞ்சள்தூள் கலந்த நீர், நிறைகுடம் நீர் ஒவ்வொன்றாக எடுத்து அக்குச்சிக்கு வாஸ்துபகவானாகவும், குல தெய்வமாகவும் மனதில் தியானித்து அபிஷேகம் செய்யவும்.

சந்தனம், குங்குமம் போன்றவைகளை வாஸ்துகுச்சிக்கு இட்டு ஊதுபத்தி, சாம்பிராணி, தீபாராதனை காட்டவும். குங்குமம் தோய்த்த நான்கு எலுமிச்சம்பழத்துண்டுகளை எடுத்து பிழிந்து அக்குச்சிக்கு சாந்தி செய்யவும். பிறகு பிழிந்த அந்த எலுமிச்சம்பழத்துண்டுகளை நான்கு திசைகளில் போடவும்.

வாஸ்து பகவான் இந்த பூஜையை ஏற்றுக்கொண்டு வீட்டுக்காரருக்கு பூரண ஆசிகளை வழங்கி, நல்ல முறையில் கட்டடம் கட்டி முடித்து கிரகப்பிரவேசம் செய்யும் வரை அந்த இடத்தில் இருந்து கொண்டு அருள்பாலிக்கிறார்.

அவ்வாறு பூஜை செய்த வாஸ்துபுருஷன் ஆவாஹனம் ஆகியுள்ள வாஸ்து குச்சியை எக்காரணத்தையும் கொண்டு சுத்தியலோ, வேறு ஆயுதங்களையோ வைத்து தட்டி, சிதறும்படி பூமியில் இறக்கவேண்டாம்.

பூஜையை முடிந்த பிறகு ஆசாரி, கொத்தனார் மற்றும் குடும்பத்தார் அனைவருக்கும் இனிப்பு பலகாரங்களை வழங்கி, தன மரியாதையை செய்யவும்.